# அது ஒரு காலம்

**'சோமு'**

(என் இதயச் சாளரத்தைத் திறந்து பார்க்கிறேன். என்ன வெல்லாமோ காட்சிகள் என் முன் தோன்றி மறைகின்றன. நானே வேறொரு மனிதனாக என் கண் முன் காட்சி அளிக்கிறேன். என்னுடனே நான் பேசுகிறேன்; என் உள்ளம் என்னை நோக்கி என்ன வெல்லாமோ புலம்ப ஆரம்பித்து விட்டது)

**நீ** சிறு பிள்ளையா யிருந்த காலத்தில் என்ன கனவு கண்டாய்? உனக்கு வயதாகட்டும் என்று ஏதோ ஒரு இன்பம் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பதாகவே கருதினாய். ஆனால், இப்பொழுது என்ன காண்கிறாய்? உனக்கிருந்த இன்பத்தையும் இழந்துவிட்டுத் துடிதுடிக்கிறாய்.

கழிந்த காலமெல்லாம் விரைவாக வீணாகக் கழிந்துவிட்டது. உன் இதயக் கூண்டிலிருந்த இன்பக் கிளி எங்கோ மாயமாய்ப் பறந்து விட்டது. இனி உனக்கு எஞ்சியிருப்பது துக்கமும் துடி துடிப்புந்தான்.

இதயச் சாளரத்தின் வழியாக உன் இளமைக் காட்சியைப் பார். பாலியத்தில் உன்னிடமிருந்த சந்தோஷமெல்லாம் இப்பொழுது எங்கே போய் விட்டது? இதயத்தின் ஆழத்திலிருந்து வந்த உண்மைச் சிரிப்பெல்லாம் இப்பொழுது எங்கே? வாழ்க்கையில் ஏனிப்படிச் சலிப்பு ஏற்பட்டு விட்டது? சதா இன்பத்தில் திளைத்த நீ ஏன் இப்படி அலுத்து விட்டாய்? உற்சாக மென்பதையே காணோமே!

பாலியத்தில் உன்னிடமிருந்த அமுதின்பம் தேனின்பம் எல்லாம் இப்பொழுது ஓடி விட்டதே! ஏடுகள் கூடப் பின்வாங்கும் படி இன்பக் கதைகள் சொல்லும் திறமையை இழந்து விட்டாயே! கம்பனுக்கு ஒப்பாக இன்பந் தந்த உன் மொழிகள் எங்கோ மறைந்து விட்டனவே. ஐயோ, என்ன மாறுதலிது!

**கன்னலினிமையொடு விதவிதக்**
**கதைகள் சொன்னகாலம்**

மின்னலினைப் போலே-கணத்தில்
மறைந்து விட்டதம்மா!

என்று ஏங்குகிறதே உள்ளம்.

உன்னுடைய தளர் நடையழகைக் கண்டு உன்னை அள்ளி அணைத்து முத்தமிட்டவர் எத்தனை பேர்! உன் முகத்தில் விளங்கிய களையையும் துடிப்பையும் கண்டு அதிசயித்தவர் எத்தனை பேர்! அப்படிப்பட்ட நடையழகும் முகவழகும் இப்பொழுது எங்குதான் போய்விட்டன!



அந்தக் காலத்தில், உன் பேரில் எல்லோருக்கும் பாசமும் உள்ளன்பும் இருந்தது. இப்பொழுது அதற்கு நேர் விரோதமாக அல்லவா இருக்கிறது! உலகம் உன்னை வெறுத்துத் தள்ளுகிறது. முன்னால் (உலகம்) கொண்டிருந்த அபரிமிதமான வாஞ்சையில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூட இப்பொழுது காணோமே!

அன்னை மடி மீதிருந்து விளையாடிக் கொஞ்சிய கால மெல்லாம் ஒரு சொப்பனமா?தத்தைமொழி பயிற்றி அன்னை, ''கண்ணே, அமுதே, என் கற்பகமே!'' என்று தாலாட்டிச் சீராட்டிய தெல்லாம் ஒரு பிரமைதானா? ஐயோ! கால தேவன் என்ன அநியாயம் செய்கிறான்!

வைகறையில் மினுக்கு மினுக்கு என்று அம்மன் கோவில் சிறிய கோபுரத்திற்கு மேலே ஆகாயத்தில் முளைக்கும் விடி வெள்ளியை யார் முந்திப் பார்க்கிறார்கள் என்று நீயும் உன் அக்காளும் போட்டி போட்டு விழித்த காலமெல்லாம் ஞாபகமிருக் கிறதா? இப்பொழுது நீ எந்த நிலைமையிலிருக்கிறாய்? சூரியன் முதுகுக்கு மேல் 'சுள்' என்று அடித்த பிறகுதான் குப்புறப் படுத்திருந்தவன் நிமிர்ந்து எழுந்திருக்கிறாய். எவ்வளவு மாறுதல்!

நீ பாலியத்தில் 'கிட்டிப்புள்ளி' விளையாடிய மாந்தோப்பை நினைத்துப் பார். சிறு வயதில் பெரிய பெரிய 'கிரிக்கெட் டீம்'களுடன் எல்லாம் தைரியமாய் விளையாடிச் சளைக்காமல் தோல்விகள் அடைந்ததெல்லாம், இன்று நினைத்தாலும் திருடக் கொடுத்த பணக்காரனைப் போலல்லவா ஏக்கம் உண்டாகிறது. தினந்தோறும் சாயந்திரம் நதிக்கரையில் 'சடுகுடு' ஆடியதும், குஸ்தி போட்டதும், சொல்லாட்டம் ஆடியதும், என்றும் மறக்க முடியாத சம்பவங்களன்றோ!

உண்மையில், அப்பொழுதெல்லாம் நீ நிகழ் காலத்திலேயே உன் மனத்தைச் செலுத்தி இன்பம் கண்டு கொண்டிருந்தாய். உமர் கயாம் சொல்லுகிறபடி, ''இன்னும் உதிக்காத எதிர்காலத்தைப்

பற்றியும், கழிந்து போன இறந்த காலத்தைப் பற்றியும் ஏன் அலட்டிக் கொள்ளுகிறாய்? இன்று (நிகழ்காலம்) இன்பமாயிருந் தால் சரிதானே!'' என்ற தத்துவத்திற்கு இலக்காக வல்லவா இருந்தது உன் இளமை வாழ்க்கை!

பாலியத்தில் நீ பெரிய ரஸிகனாகவும் ஏன் - கலைஞனாகவும் கூட இருந்தாய். கடலை அனுபவிப்பதும், இயற்கைக் காட்சியை ரஸிப்பதும் உன் சுபாவங்களாயிருந்தன. எங்காவது சங்கீதம் கேட்டால், உன்னை யறியாமலே நீ அதன் தாளத்திற் கிசைந்தாற் போல் அழகாய் ஆட ஆரம்பித்து விடுவாய். அப்பொழுதெல்லாம் உனக்கு எதையும் அறிந்துவிட வேண்டும் என்று ஒரு ஆசை இருந்தது. வீதியில் போகும் பொழுதே அங்குள்ள நிகழ்ச்சிகளை யெல்லாம் நன்றாய் ஆராய்ந்து விடுவாய். எங்காவது கூட்டம் கூடியிருந்தால், ''அது என்ன காரணத்திற்கு, என்ன?'' என்ற விஷயங்களையெல்லாம் அறிந்து கொண்டாலொழிய, உனக்குத் திருப்தி ஏற்படாது. இது மட்டுமா? உனக்கு ஆச்சரியகரமான மனோ தர்மம் வாய்த்திருந்தது. கற்பனை உலகத்திலேயே நீ சஞ்சரித்துக் கொண்டிருந்தாய். உன் வீட்டுத் தூண், உன் கற்பனைக்குச் சவாரி செய்யும் குதிரையாகவோ அல்லது யானையாகவோ மாறிவிடும். இரண்டு பொம்மைகளை வைத்துக் கொண்டு ஒரு பெரிய கலியாணமே நடத்தி விடுவாய். பல செப்புகளில் நிரப்பப்பட்ட ஒரே வகையான புழுதி மண், உண்ணுவதற்குத் தகுந்த பலவகை உணவுகளாக மாறிவிடும். உன் கற்பனையில் ஒரு சின்னத் தகரப் போணி உனக்கு மத்தளம் அடிப்பதற்குத் தவலாகக் காட்சி அளிக்கும். உன் அப்பாவின் பென்சிலை நாதஸ்வரமாகவே கருதி விடுவாய். என்ன மனோபாவம் உனக்கு வாய்த்திருந்தது! அதை வியந்துதானே கிராட் என்ற பிரெஞ்சு சைத்திரிகர், 'குழந்தையின் நோக்கோடு படம் வரையும் ஆற்றலை எனக்குக் கடவுள் அளிக்க வேணும்!' என்று ஆசைப்படுகிறார். ஐயோ! இப்பொழுது அந்த ஒப்பற்ற ரஸிக உணர்ச்சி, அழகுணர்ச்சி, கற்பனை இவை எல்லாவற்றையும் காலதேவனுக்குப் பறி கொடுத்து விட்டாயே!

மழை பெய்து விட்டால் மயிலுக்குக்கூட அவ்வளவு கொண் டாட்டமாயிருக்காதே! அப்பாவின் புத்தகத்திலிருந்தோ அல்லது தங்கையின் நோட்டிலிருந்தோ ஒருவருக்கும் தெரியாமல் ஒரு தாள் கிழித்து நீ படகு விட்ட காலமெல்லாம் மாயமாய் மறைந்து விட்டதே.

ஆற்றில் வெள்ளம் என்றால் உனக்குத்தான் என்ன உற்சாகம்! கரை மண்டபத்திலிருந்து குதித்து நீந்தலடித்ததெல்லாம்

இப்பொழுது நம்பக்கூட முடியவில்லை. காரணம், இப்பொழுது நீ ஆற்றிலிறங்கவே பயப்படுகிறாயே!

சிந்தனை உனக்குக் கடவுள் அளித்த தூரதிருஷ்டிக் கண்ணாடி. அதைக் கொண்டு உன் பாலிய அட்டகாசக் காட்சிகளைப் பார். கலியாணப் பந்தலில் யாரோ ஒருவர் எங்கோ நினைவாயிருக்கும் போது, ஒரு வாழை நாரைக் கிழித்து, அவர் தலை மயிரோடு கட்டி, அதை வெகு தூரம் கொண்டு போய் மறைவிலிருந்து கொண்டு சடக்கென்று சுண்டி யிழுத்த தெல்லாம் பொய் போலல்லவா இருக்கிறது! கலியாண வீடுகளில் எங்கிருந்தோ வந்து உன் கையிலகப்பட்டுக் கொள்ளுகிற அரைப் பைத்தியங்களை நீ முழுப் பைத்திய மாக்கியதெல்லாம் உன்னால் மறக்க முடிகிறதா?



துள்ளி விளையாடி-வேடிக்கைத்
துணுக்குகள் பேசிக்
கள்ளக் களிகளித்து-காளைபோல்
கழித்த காலமெல்லாம்

எங்கேயோ போய்விட்டதே!

தீபாவளி என்றால் உனக்கு இப்பொழுது அவ்வளவாக உற்சாகம் இருக்கிறதா? 'பணச்செலவு' என்று கவலைப்படுகிறாய். ஆனால் சிறு பிராயத்தில் உனக்குத் தீபாவளி என்றதுமே ஒரே குஷி தான். இந்தத் தீபாவளி கழிந்து விட்டால் அடுத்த தீபாவளியைப் பற்றியே எண்ணி எண்ணிச் சந்தோஷமடைவாய். விடியுமுன் எழுந்திருந்து, எண்ணெய் தேய்த்துக் குளித்து, புது வேஷ்டி கட்டி, கரண்டியில் தணல் எடுத்துக் கொண்டு, சரவெடியை ஒவ்வொன்றாக உதிர்த்துப் போட்ட காலமெல்லாம் இப்பொழுது ஓடி ஒளித்துக் கொண்டதே.

உன் குழந்தை ராஜம் தேர்த் திருவிழாவிற்குப் புறப்படும் அழகைப் பார். அவள் முகத்தில் மலரும் சிரிப்பைக் கவனி. நீயும் ஒரு காலத்தில் இவ்வளவு தூரம் சந்தோஷமாயிருந்தாய் என்பதை நம்புகிறாயா? திருவிழாத் துட்டுக்கு நீ அம்மாவிடம் சண்டை போடும் ஜோரெல்லாம் இப்பொழுது மடிந்து விட்டதே. அதற்குப் பதிலாக உன் குழந்தை எங்கு திருவிழாத் துட்டுக்குச் சண்டை போடுமோ என்று கவலைப்படுகிறாய். குடும்பக் கவலை உன் மனத்தை அரிக்கிறது. பெரிய பாரத்தை நீ தாங்க வேண்டியிருக் கிறது. எனவே, தேர் என்றதும், குழந்தைகள் எப்படி இவ்வளவு சந்தோஷமடைந்து விடுகின்றன என்று கூடத் திகைப்படைகிறாய்.

வாழ்க்கைப் பாதையில் வெகு தூரம் நடந்து வந்து விட்டாய். கொஞ்சம் திரும்பிப் பார். உன் பள்ளிக்கூட இன்பங்களை அதாவது விஷமங்களைப் பற்றிச் சிந்தித்துப் பாராம லிருக்க முடியாது.

பெஞ்சி மேல் ஏறி நிற்க மறுப்பதும், உடனே வாத்தியார் வெளியே போகச் சொல்ல, நீ 'மாட்டேன்' என்று சண்டை போடு வதும், இன்னும் உனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறதே. பையன் களைத் தொட்டு அடிக்காமல், மண்டையில் ஒரு கடுதாசியைப் போட்டு, அதற்கு மேல் தன் இரும்புக் கையால் நறுக்கென்று குட்டும் உபாத்தியாயரைத் 'தொட்டாவாடி' என்றும், அந்த மீசை வாத்தியாரைக் 'கரடி' என்றும், தம்மை மகா மேதாவியாகப் பாவித்திருந்த உபாத்தியாயரை 'மூளை' என்றும், நாகரிக உடை உடுத்தி மூக்குக் கண்ணாடியும் முகமுமாய் ஜோர் நடை நடந்து வரும் கணக்கு வாத்தியாரைப் 'பாரிஸ்' என்றும், இங்கிலீஷ்காரன் என்றே தம்மை நினைத்துக் கொண்டு, ஒரு மாதிரி 'டக்டக்' என்று இங்கிலீஷ் பேசும் தலைமை உபாத்தியாயரைத் 'துரை' என்றும், அந்த ஒன்றரைக் கண் டிரில் உபாத்தியாயரை 'ஒண் பாயிண்ட் பைவ்' (One Point five) என்றும் இப்படி யெல்லாம் கேலி செய்து திரிந்த காலம் இன்னொரு முறை வருமா?

வேடிக்கை விஷமத்தைத் தவிர உன் மனசில் வேறு வஞ்சகம் கபடு இருந்ததுண்டா? எவனையாவது கெடுக்க வேண்டும் என்று நீ எப்பொழுதாவது எண்ணியதுண்டா? இல்லவே யில்லை. அது காரணமாகவே உனக்கு இன்பமயமாயிருந்தது உலகம். ஆனால், இப்பொழுது நீ எப்படியிருக்கிறாய்? மற்றவன் பேரில் பொறாமை கொள்ளுகிறாய். ஒருவன் முன்னுக்கு வர உனக்குச் சம்மதமில்லை. உன்னைத் தவிர உலகத்திலுள்ள மற்ற எல்லாரையும் நீ வெறுக் கிறாய். அந்த மாசு மருவற்ற குழந்தை உள்ளமா இப்படி யெல்லாம் மாறிப் போய் விட்டது? இனி, அந்தக் குழந்தை உள்ளத்தை 'வா!' என்று அழைத்தால் வருமா?

உன்னைப் பற்றிப் பாலியத்தில் நீ ஒன்றும் அபிப்பிராயப் பட்டுக் கொள்ளவில்லை. இப்பொழுதிருக்கிற மண்டைக் கனம் அப்பொழுது இல்லை. எனவே அழகுக் குணமான பணிவு உன்னிடம் குடி கொண்டிருந்தது. கர்வம் என்ற கோர ரூபம் உன்னிடத்திலிருந்ததில்லை. அதனால் உலகம் ஓடி விளையாடித் திரிவதற்குகந்த இன்பச்சோலையாயிருந்தது. ஆனால் இப்பொழுது அதே உலகம் வரண்ட பாலைவனமாக வல்லவா உனக்குத் தோன்றுகிறது!

ஜீவகாருண்யம் என்பது புத்தரின் கொள்கை என்றுதான் உனக்கு இப்பொழுது படுகிறது. ஆனால் பாலியத்தில் உன் அருங் குணங்களில் ஒன்றாயிருந்தது. ஒரு ஈ தண்ணீரில் விழுந்துவிட்டால் அதை எடுத்து விட்டுவிட உன் மனசு துடிதுடிக்கும். அம்மன் கோயிலில் ஆடு வெட்டுகிறார்கள் என்றால் உனக்குக் கண்ணீர் வந்து விடும். அப்பாவிடம் போய், 'அப்பா, அப்பா, ஆடு அழாதாப்பா? அதுக்கும் நம்மைப் போல உயிரில்லையாப்பா?' என்று முறையிடுவாய். உன் கருணை யெல்லாம் இப்பொழுது பொய் போல் போய்விட்டதே!



ஏழை என்றால் உனக்கு இப்பொழுது ஒரே வெறுப்பு. 'அவன் தீண்டத் தகாதவன், அவன் பறையன், இவன் பள்ளன்!' என்றெல்லாம் வித்தியாசம் பாராட்டுகிறாய். பாலியத்தில் இந்த வித்தியாசமே உனக்குத் தெரியாது. உன் அப்பா முதல் உங்கள் வீட்டு விவசாயி மகன் சொள்ள முத்துவரை எல்லோரும் உனக்குச் சமம்தான். எல்லோருடனும் நீ களங்கமற்றுப் பழகுவாய். இப்படி யெல்லாம் பரிசுத்தமாயிருந்த உன் மனசில் இப்பொழுது ஜாதி உரிமை, பேதம் முதலியவை எங்கிருந்து முளைத்துவிட்டன?

இப்படி யெல்லாம் நீ முற்றிலும் மாறிப் போயிருப்பதால்தான் உன்னை மிகவும் விரும்பிப் புகழ்ந்த உலகம், இப்பொழுது உன்னை வெறுத்துத் தள்ளுகிறது. இளமையில் உன்னுடன் பேசி வந்த உங்கள் வீட்டுக் கிளியும், கொத்தித் திரியும் அந்தக் காக்கையும் கூட உன்னைக் கண்டு இப்பொழுது அஞ்சுகின்றன.

கால வெள்ளம் உன்னை எங்கோ சுருட்டிப் புரட்டிக் கொண்டு ஓடுகிறது. உன்னுடன் எண்ணிறந்தவர் அதன் போக்கிலேயே மிதந்து செல்லுகிறார்கள். அதன் வேகத்தை மீறி நீ எதிர்த்து நீந்திச் செல்வது எளிதில் முடிகிற காரியமா? அப்படி முயற்சித்தாலும், எதிர்த்துச் செல்வதற்குப் பதில், அதே வேகத்தோடு இன்னும் பின்னால்தானே போய்க் கொண்டிருப்பாய்.

இப்பொழுது நீ வனாந்திரத்தில் இருளில் எவ்வளவு திண்டாடி னாலும், ஒரு காலத்தில் இன்பம் நிறைந்த திறந்த வெளியில் உல்லாசமாக ஆடி ஓடித் திரிந்தாய் என்ற பெருமை மாத்திரம் உனக்கிருக்கிறது. எனினும், அந்தப் பெருமை, ''நான் ஒரு காலத்தில் பணக்காரனாயிருந்தேன்!'' என்று ஒரு பிச்சைக்காரன் பெருமையடித்துக் கொள்ளும் கணக்கில்தானே!

– 1938